உ

முருகன் துணை.



திருச்செந்தூர்

# முருகப்பெருமான் வெண்பா அந்தாதி.



## குருபூசை மலர்.

1983

உ

செந்திலாண்டவன் துணை

திருச்செந்தூர்

# முருகப்பெருமான் வெண்பா அந்தாதி



நூலாசிரியர்:

மகான் - வண்ணச்சரபம்

**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**

திருவாமாத்தூர்

ஷை சுவாமிகள் 85-வது குருபூசை விழாவன்று

வளையாம்பட்டு திரு. K. பழனிவேல் பிள்ளை

அவர்களால்

பதிப்பித்து வழங்கப்பெற்ற

**குருபூசை மலர்**

1983.



நூலாசிரியர்:

வண்ணச்சரபம்

அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

# முன்னுரை.

## நூல்:

**திருச்செந்தூர் முருகன் வெண்பா அந்தாதி** என்னும் இந் நூல், திருச்செந்தூரில் கோயில்கொண்டு வற்ருப் பெருங் கருணைக்கடலாய் வீற்றிருக்கும் செந்திலாண்டவன்மீது பாடி-யருளப் பெற்ற துதிநூலாகும் இதில் நூறுபாடல்களும், காப்பு, நூற்பயன் இரண்டு பாடல்களும், உள்ளன.

## நூலமைப்பு:

பாவினங்களுள் உயர் வகையைச்சார்ந்தது வெண்பா என்ற யாப்பாகும் என்பர். அப்பாவினத்தால் அந்தாதியாக பாடப் பெற்றது இந்நூல். அந்தம் + ஆதி-அந்தாதி. அதாவது முன்பாடலின் இறுதி அதாவது அந்தம், அடுத்த பாடலின் முதலாக அதாவது ஆதியாக அமைத்துப்பாடுவதுடன் நூலின் முதற் சொல்லும், இறுதிப் பாட்டின் இறுதிச் சொல்லும் ஒரே அமைப்புறப் பாடப்படவேண்டும் என்பது விதி. இம் முறையில் அருளாளர்களால் பாடப்பெற்ற அந்தாதி நூல்கள் பலவுள. கந்தரந்தாதி, அபிராமியந்தாதி, திருமகளந்தாதி ஆகியவைகளை எடுத்துக்காட்டாக நினைவு கூரலாம்.

## நூற் கருத்துகள்:

பாடல்கள் எளிய நடையில் தெய்வமணங்கமழும் தீந் தமிழில் பக்திச்சுவை ததும்பத் தேனென இனிக்கும் சிறந்த சொற்களால் அமைந்துள்ளன. முருகன் திருவருட் பெருமை, அருளாடல்கள், அடியார் பெருமை வேண்டுகோள் முதலியன இதனுட் காணலாம் கற்ருர்க்குக்கழி உவகையூட்டும் கருத் தோவியங்களால் அமைந்த அழகிய நூலிதுவாகும்

## நூலாசிரியர்:

வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் 1839ல் திருநெல்வேலியில் தோன்றினர். இளமை முதல் வேல்

வழிபாடு செய்து கவிதை பாடும் திறன்வாய்ந்து, சமயவேறு-பாடில்லாமல் பொதுநெறிக்கொள்கையை வற்புறுத்திப் பல்லாயிரம் பாடல்கள் அருளினர். அவைகளைத் தாமே பனை யோலைச்சுவடியில் எழுதியும் வைத்தனர். பலதல வழிபாடு செய்து செல்லுமிடமெங்ஙனும் அருள்நெறிக் கொள்கையைப் பரப்பினார். அருளாடல் பல செய்து இறுதியில் விழுப்புரத்தை அடுத்த திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் 1898ல் ஞான சமாதி கொண்டனர்.

**நூல் தோன்றிய வரலாறு:**

முருகப்பெருமான் திருவருட்செல்வராக விளங்கிய இவரிடம் செந்திலாண்டவன் ஒருசமயம் மனவெளியில் தோன்றி "எமக்கு 12 வள்ளி நாயகிக்கு 1, தெய்வயானைக்கு 1, வீரவாகுவுக்கு 2, ஆகப் பதினாறு நூல்கள் இயற்றுக பன்னி-ரண்டாவது நூல் முடியும்போது கந்தலோகத் திருநீறுடன் உருத்திராட்சமும் தருவோம்" என அருளினர். திருவருளாணை-யைஏற்று மகிழ்வடைந்த சுவாமிகள் ஆர்வமுடன் நூல்களை இயற்றலானார் பன்னிரண்டு நூல் முடிந்தவுடன் முருகனரு-ளியதை எதிர்நோக்கியிருந்தனர் எய்தப்பெருதநிலையில் மனம் வருந்தி தாம் எழுதிய நூல்களைச் சிதைத்தார் இனி நூல்கள் எழுதுவதில்லை என்ற நோக்குடன் தியானம், செபம் செய்து வரலாயினர். பின்பொருகால் மனத்தெளிவுகொண்டு செந்தி லடைந்து முருகனருளை மனதுட்கொண்டு மீண்டும் அவனரு ளுரைக்கேற்ப 16 நூல்கள்பாடலானார். அவற்றை முருகன் திருவடியில் வைத்து வழிபட்டு சண்முகவிலாச மண்டபத்தில் அரங்கேற்றினர் எனச்சுவாமிகள் வரலாற்றில் காணப்படுகிறது அவ்விதம் பாடியருளிய நூல்களுள் முதல் நூலாக இருப்பது இவ்வரிய வெண்பா அந்தாதியாகும் என்க.

**நூல் பதிப்பாளர்:**

வளையாம்பட்டு திரு. K. பழனிவேல் பிள்ளை, அவர்கள் இந் நூலாசிரியர் ஞானசமாதியுள்ள திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத்திற்குரிய பேரன்பர். முருகனடியாராகிய தம் மூதாதையர் திரு **ஆறுமுகம் பிள்ளை** அவர்களைப்போலவே அவர்தம் மைந்தர்களாகிய திரு. **ஆ.கிருஷ்ணமூர்த்திப் பிள்ளை** திரு. **ஆ.இராமமூர்த்திப் பிள்ளை**, ஆகியோர் மடாலயத்திற்குத் தொண்டராகவுள்ளனர் மூத்தமைந்தர் மகனாகிய திரு **K.பழனி வேல் பிள்ளை** அவர்களும் மிக்கஈடுபாடும் பேரன்பும்கொண்டுள் ளார். தம் தாத்தாவே மடாலயத்தில் தைப்பூசத்தன்று காவடிப் பூசை செய்தல், அடியார்கட்கு அன்னமளித்தல் போன்ற பணிகளைச் செய்ததுபோல இவரும், பெற்றோருடன் கலந்து ஆர்வமுடன் கடைப்பிடித்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

**வேண்டுகோள்:**

"யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்றுங்கு இந்நூலினைப்படித்து மகிழ்ந்த அன்பர் திரு K. பழனிவேல் பிள்ளை அவர்கள் திருவருளின்பத்தை அடியார்கள் அனைவரும் பெறவேண்டும் என்ற நன்னோக்குடன் இந்நூலைப் பதிப்பித்து வெளியிடுகிறார் அன்பர்கள் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து கற்று மகிழ வேண்டுகிறோம்

பதிப்பித்துவழங்கும் திரு K பழனிவேல்பிள்ளை அவர்களும் அவர்கள் குடும்பத்தினரும், படித்துமகிழும் அன்பர்களும் செந்திலாண்டவன் திருவருள் நலம் பெற்றுப்பல்லாண்டுகள் வாழ அவனருட்பத மலரைப்போற்றி வாழ்த்துகிறேன்.

இன்னணம்,

திருவாமாத்தூர் (வழி) விழுப்புரம்.

**தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியர், கௌமார மடாலயம்.

## பாராட்டுக் கவிதை.



ஆறுமுகம் பிள்ளை அணிவளையாம் பட்டூரில்
மீறுமன்பால் வாழ்ந்திட்ட வேளாளர் - தேறுமைந்தர்
கிட்டிண மூர்த்திபெற்ற கீர்த்தி பெறும்புதல்வன்
தட்டில் பழனிவேலன் தான்.

ஆமாத்தூர்த் தண்டணிகை அண்ணல்திருக் கோயிலிடைப்
பூமாதும் போற்றிடுதைப் பூசமதில் - பூமாலை
அணிகா வடிப்பூசை ஆன்றோர் பலர்க்கும்
பணிவுடன்நல் ஊணளிப் பார்.

தண்டபா ணிப்பெருமான் தண்செந்திற் கந்தன்மிசை
விண்டஇவ்வந் தாதி வியனறிந்து - தொண்டர்
பெறத்தந்திட் டான்பழனி வேற்பெயர்கொ ளன்பன்
அறம்வளர்க! வாழ்க! அமைந்து.

நூலாசிரியர் பெயரர்
**முருகதாச சுவாமிகள்,**
தங்கல்: தண்டபாணி சுவாமிகள் மடம்,
அடிவாரம், பழனி.

உ

முருகக்கடவுள் துணை

# திருச்செந்தூர் - முருகப்பெருமான்
# வெண்பா அந்தாதி

காப்பு - வெண்பா

செந்துவர்வெற் பென்றிலகு சேந்தனடியார் தமிழ்போற்
சிந்து முழங்குதிருச் செந்தூரில் - வந்துமுதல்
வேண்டு மவரை வினையொழிக்கும் மெய்வழியில்
தூண்டுகளிற் றானே துணை.

நூல்

சீர்மருவு செந்திநகர்ச் செவ்வேளைத் தேவர்புகழ்
பேர்மருவு வேற்கைப் பெருமானைக் - கார்மருவு
கண்டமுளான் பெற்றநுதற் கண்மணியைக் கைகுவித்துக்
கொண்டவர்க்கே தீரும் குறை. 1

குறைவனைத்தும் எண்ணிக் கொதிக்கின்ற நெஞ்சில்
நிறைவமையும் வண்ணம் நினையாய் - மறையவர்கள்
ஆர்க்குமெழிற் செந்தினக ராதிபனே! ஆகமழை
நீர்க்குமிழி யாய்விடுமுன் னே. 2

முன்னே உரைத்த மொழியொன்றும் தப்பாமல்
இன்னே அருளற் கிசைகுவாய் - மின்னேரும்
வேலாயு தம்பிடித்து மிக்கதிருச் செந்தூரிற்
கோலா கலஞ்செய் குகா. 3

குகனே! திருச்செந்தூர்க் கொற்றவனே! ஈசன்
மகனே! எனத்துதித்து வாழ்ந்தும் - இகலோருக்(கு)
அஞ்சித் தவிக்கும்வண்ணம் அம்புயன்விட் டான்எனஎன்
நெஞ்சிற் கருதுகில்லே னே. 4

ஏனேன் எனஅடியேன் எப்போ தழைத்தாலும்
வானே வழியா வரவேண்டும் - மீனேரும்
கண்ணார் இருவர்புணர் கந்தனே! செந்தினகர்
அண்ணா! வடிவேல வா 5

வேலவனைச், செந்தினகர் வித்தகனை, வேடமகள்
மாலவனைப் பச்சைமயில் வாகனனைச் - சாலக்
கருதி அருட்காட்சி கண்டவரைக் கண்டு
சுருதிநலம் கொள்ளல் சுகம். 6

சுகமுனிவன் கேட்டுமகிழ் தூயபுகழ்ச் செந்தூர்க்
குகனருளே தஞ்சமெனக் கொண்டால் - இகபரமும்
சித்திக்கும், ஆனந்தச் செல்வம் செழிக்குமுண்மைப்
பத்திக்கும் உண்டாம் பலன். 7

பலங்கொண்ட சூர்மாவிற் பட்டுருவத் தொட்டு
வலங்கொண்ட வேலுடையான் வாழும் - நலங்கொண்ட
செந்திற் பதியிடத்திற் சென்றவனைச் செந்தமிழால்
வந்திக்கப் பெற்றேன் வரம். 8

வரந்தந்து மாயா மயக்கடல்விட் டேறக்
கரந்தந்து காக்கக் கடன்காண் - சுரந்தந்து
தென்னவனை முன்னாண்ட செந்தினகர்த் தேசிகனே!
இன்னமிரங் காதிருப்ப தேன். 9

ஏனற் புனங்காத் திருந்தாள்முன் ஏகியந்நாள்
வானத் தவளை மறந்தாயோ - ஞானமொடு
செல்வமிகு செந்தினகர்ச் செவ்வேளே! செஞ்சடையில்
வில்வமணி வார்பெறுவாழ் வே. 10

வாழைக் கனியின் மதுஆறு பாய்ந்துவளர்
தாழைப் பொழில்சூழ் தருசெந்தூர் - ஊழைத்
திருத்துமென வந்தடைந்தேன்; செவ்வேற் குகனே!
வருத்துதொழில் ஒன்றை மற. 11

மறமகள்தன் பாற்போய் வருந்திருத்தாள் அன்பே
திறமெனக்கொண் டேன்உதவி செய்வாய்! - அறமுயல்வார்
வாழுந் திருச்செந்தூர் வள்ளலே! மற்ருென்றைத்
தாழுமோ என்றன் தலை 12

தலையாறு கொண்டவனே! சந்தவரைச் செந்தில்
நிலையாக நின்றவனே நீயன்[று] - இலையூடு
வைத்தவெண்ணீ றீந்துரைத்த வார்த்தை மறந்தனையோ
எய்த்தடியேன் வாடுகின்றே னே 13

ஏதம் பலகோடி யான்புரிந்த(து) உண்டெனினும்
நீதந்த நீறவற்றை நீக்காதோ - சூதமறக்
காய்ந்தவடி வேற்கரத்துக் கந்தனே; செந்தமிழ்நூல்
ஆய்ந்தவர்கள் வாழ்செந்தி லா 14

செந்திற் பதியானே! செக்கர்வெட்கும் சீரானே!
தந்திப் பரியூரும் சண்முகனே - மந்திக்
குரங்கனைய நெஞ்சகத்தின் கோரம் சகியேன்
இரங்கியெதிர் வந்தருள்வா யே. 15

வாயே உனக்குநல்ல வாழ்வெதென்றால் வைவேற்கைச்
சேயே திருச்செந்தூர்ச் செவ்வேளே - நீயே
துணையென்று சந்தமும் சொல்வதொன்றே கண்டாய்!
இணையின் றியபுகழுண் டே 16

உண்டேயுன் உள்ளத் துரிமையென்றன் மீதெனவும்
கொண்ட யுலகிற் குதிக்கின்றேன் - தண்டேந்தும்
கைம்மறலி கண்ணெதிரிற் காட்டாதே செந்தினகர்ச்
செம்மலேயே! வேற்கையர சே; 17

அரசாகிச் செந்தினகர் ஆளும் குகனே!
முரசாரும் நின்கோயில் முன்பிற் - பரசாரும்
கையான் முதலாம் கடவுளரெல் லாம்வணங்கல்
பொய்யாத வண்ணம் புரி 18

புரிசடையிற் கங்கைவைத்த புண்ணியனும், போதப்
பெரியகடல் உண்டவனும் பேணித் - தெரிய
உரைத்தனை என்றனுக்கும் ஓதியருள்; சந்த
வரைத்தலத்துச் செந்தில்முதல் வா. 19

முதல்வனெனத் தேறுநர்க்கும், முக்கட் பரமன்
புதல்வனெனப் போற்றுநர்க்கும் பொய்தீர்த்(து) - இதமகிதம்
கண்டுதவி செய்யுமெழிற் கந்தனருட் காட்சிநலம்
உண்டுதிருச் செந்தினக ருள். 20

உள்ளம் தளர, உரையும் தடுமாற,
வெள்ளம் கலுழ்ந்து விழிசோர - மெள்ளவந்துன்
சந்நிதியில் நின்றறியேன் சந்தவரைச் செந்தினகர்ச்
செந்நிறவே லாஉதவி செய். 21

செய்ய பவளத் திருவாய் திறந்தொருசொல்
ஐயமறச் சொற்றருளல் ஆகாதோ - வையகமும்
வானகமும் போற்றுசெந்தின் மாநகரில் வாழ்குகனே!
நானடிமை யன்றோ நவில் 22

நவிலும் கலைமுழுதுப் நான்முகனைக் குட்டிப்
புவிப்படைத்த நின்சீர் புகன்றும் - கவிபகரென்(று)
என்னையும்நீ கேட்டவிதம் என்னே இலங்குசெந்தூர்
தன்னையினி தாண்டருள்கந் தா! 23

கந்தா! திருச்செந்தூர்க் காவலவா! கன்னிபெற்ற
மைந்தா! எனவே வழுத்தாமல் - பந்தாய
கொங்கை மடவார் குணம்பாடிக் கொண்டாடிச்
சங்கைகற்போர்க் குண்டோ தவம் 24

தவமும், திருநீறும், தண்டமிழும் தந்தும்
கவலைப் படுமாறு கண்டாய் - பவளநிறக்
குன்றமெனச் செந்தினகர்க் கோயிலிடம் வாழ்குகனே!
உன்றனக்கீ தாமோ உரை 25

உரையும் உணர்வுமிழந் தோங்காரம் என்னும்
கரையும் கடந்தபதம் காட்டும் - விரைமருவு
வன்ன மலர்க்கடம்பு மன்னுசெந்தி மாநகரின்
முன்னவன்றன் ஆறு முகம் 26

முகமன் பகர்ந்துபலர் முன்றிலிற்போய் நின்றேற்(று)
அகம்நொந்து வாடா தருள்வாய் - பகல்வந்து
திங்களொடு கொஞ்சுபொழிற் செந்திநகர்ச் சீர்விரும்பும்
எங்கள் குலதெய்வ மே. 27

தெய்வம் அனந்தமெனத் தேயத்தார் செப்புமொரு
பொய்வழக்கை யெண்ணியெண்ணிப் புண்படேன் - நெய்வழிதார்ச்
செச்சைமலர் சூடுமெழிற் செந்திநகர்ச் சேவகன்றன்
அச்சைநினைந் தாராய்ந்த தால். 28

ஆலிற் சதுரர்க் கறமுறைத்துள் ளானும்,அதன்
மேலிற் றுயில்வானும், வேதியனும் - வேலிற்
சிறந்தபுகழ்ச் செந்திநகர்ச் சேவகனைப் போற்றி
இறந்தழியா வாழ்வுபெற்றா ரே. 29

பெற்ருேர் களிகூரப் பெண்ணிரண்டு தந்தவரும்
மற்ருேர்க ளாயபல வானவரும் - முற்ருேகை
கொள்ளமுது சூருடலேக் கூறுகண்ட கோமானே!
என்ளரும்சீர்ச் செந்திற் கிறை. 30

இறையளவும் மெய்யுணர்ச்சி யில்லாத பாவி
குறைமுழுதும் தீரக் குறித்தேன் - பிறையணியும்
பெம்மான் மகனே பெருகுபுகழ்ச் செந்தினகர்
அம்மானே நீயறியா யா. 31

ஆயும் மறைகள் அறியாத ஆனந்தம்
ஈயும் படியென் றிசைவாயோ - ஆயும்
மனமும் உடலும் நல்க வல்லார்க் கிரங்கும்
கனமருவு செந்தில்முரு கா! 32

கா!கா! எனவே கதறுவேன் றன்னளவும்
நீகாவார் போலிருக்கை நீதமோ - வாகாரும்
செந்தினகர்ச் சண்முகனே! செய்யமயில் வாகனத்தில்
வந்திலேநீ! இன்றருளு வாய். 33

அருளும் பொருளுமறி வானந்தப் பேறும்
தெருளும் பெருகுநலம் செப்பும் - மருளுமனப்
தீயர் அணுகரிய செந்திநகர் வாழ்குமர
நாயகனைப் போற்றுகின்ற நா. 34

நாவார வாழ்த்தும் நலம்பெற்றும் நானிலத்தில்
ஈவாரை நாடி இளைக்கின்றேன் - நீவாரா(து)
இன்னந் துயர்ப்படுத்தல் ஏனோ இலங்குசெந்தூர்
மன்னவனே வேற்கைவய வா! 35

வாளைக் கயல்பாயும் வண்பணைச்செந் தூர்முருகன்
தாளைக் கருதித் தவம்செய்யீர்! - நாளைக்கு
வந்தடரும் கூற்றுவனை மாய்த்தருளால் வாகனத்தில்
உந்தமைவாழ் விப்பவரா ரோ. 36

ஆரோ ஒருவன் அடுத்தடுத்தென் றன்கனவில்
பாரோர்ஒப் பாமை பகர்ந்தானே - நீரோலம்
சங்கையறக் கொண்டசெந்திற் சண்முகனே! தண்புனத்து
மங்கைபங்கா நீயல்ல வா 37

அல்லற் பிணியில் அயரும் தமியேனுட்
சொல்லற் கரியமொழி சொல்லியநீ - இல்லறமும்
அன்றித் துறவறமும் அன்றியுற விட்டனையே
வென்றிமிகு செந்தில்வாழ் வே! 38

வாழ்வு மலிந்து மதிமருண்ட மாந்தரிடம்
தாழ்வு பகர்ந்து சலிக்கின்ற - பாழ்வினையை
என்றறக் கமையாதே ஈடில்புகழ்ச் செந்திநகர்க்
குன்றத்தில் வாழும் குகா! 39

குகைமருவு பல்கோடி குன்றிடத்தும் சென்றுண்
தகைவிளக்கும் சந்தத் தமிழின் - மிகைபாடி
வானவரும் மெச்சமகிழ் வாழ்வெனக்கென் றீகுவையோ
ஈனமில்சீர்ச் செந்திலா னே. 40

ஆனே றுகைத்தாற்(கு) அருளியதைத் தென்பொதியைக்
கோனேர் உரைத்த குருநாதா! - மானேர்கண்
மின்னார்கள் ஆடல் விளங்குதிருச் செந்தூரா!
என்னுசை நீயறிவா யே. 41

ஏல நெடுங்குழலார்க் கிச்சைகொண்டிங் கீடழிந்து
கால பயத்தாற் கலங்கினேன் - நீலமயில்
வாகனனே! செந்திநகர் வாழ்வே!முன் வந்துனது
கோகனகத் தாளைக் கொடு. 42

கொடுங்காலன் தன்னுருவக் கோரங் கருதி
நடுங்காதுன் ஆறெழுத்தை நாடி - நெடுங்காலம்
ஆயிற்றே இன்னமும்வந் தாண்டிலையே செந்திநகர்க்
கோயிற்றே வா!வேற் குகா! 43

வேற்குகனைச் செந்திநகர் மேவும் விறல்வேளை
நாற்குலத்து வித்தகர்க்கும் நல்லோனை - ஆற்குள்
இருந்தாற் கொருசொல் இசைத்தானை எண்ணிற்
பொருந்தாதோ உண்மைப் புகழ். 44

புகழ்ச்சி முழுதுமென்னைப் பூவுலகோர் கூறும்
இகழ்ச்சி முழுதுமுன தென்பேன் - நிகழ்ச்சிமுற்றும்
நின்செயலாக் கொண்டசெந்திற் சண்முகனே! சத்தியமாய்
என்செயலிங் கொன்றுமில்லை யே. 45

இல்லை செயலொன்றும் என்றனக்கென்(று) யான்விளம்பும்
சொல்லையெவர் சொல்வித்தார் சொல்லுவாய் – தொல்லைவளம்
குன்றாத செந்திநகர்க் கோயிற் குகனே!நீ
என்றுலொப் பாதார் எவர் 46

எவரும் புகழும்நலம் ஏய்ந்ததிருச் செந்தூர்
அவர்தம் புடையிலெனை ஆக்காய் - நவநவமாய்
உள்ளத் தளவில் ஒளித்துவிளை யாடல்செய்யும்
கள்ளத் தனத்துவிசா கா. 47

சாகா வரமும் தருவாய்என்(று) யானடைந்தேன்
மோகாந்த காரத்தில் மூழ்கவிட்டாய் - ஏகாந்தச்
சண்முகனே! செந்திநர்ச் சற்குருவே! தாரணியில்
எண்முகமும் கூறும் இதை. 48

இதுவதுஎன் றோதி இளைக்கும் மயல்போய்ப்
பொதுமுதல்என் றோர்ந்தும் புலர்ந்தேன் - பதுமமலர்
வாவிமலி செந்திநகர் வாழ்வே! மறுகுமென(து)
ஆவி யுனதடைக்க லம். 49

அடைக்கலம்என் றந்நாள் அடைந்த அமரர்
புடைக்கலகம் தீர்த்த புனிதா! - படைக்கலங்கொள்
பன்னிருகை யானே! பழுதில்புகழ்ச் செந்தூரா!
தின்னிருதாள் ஈந்தருள்இன் னே. 50

இன்னே இரங்கிரங்கென் றெத்தனையோ கோடிதரம்
சொன்னேன் அனந்தந் துயர்ப்பட்டேன் - கன்னேயம்
உள்ளார்போல் நீயிருக்க ஒண்ணுதொண் ணுதுசெந்தூர்
வள்ளால் மயிலேறி வா. 51

ஏறுகைத்த பெம்மாற் கியம்பியதை என்னுடன்நீ
கூறுதியேல் யாருன்னைக் கோபிப்பார் - வீறுமதக்
குஞ்சரத்தோ(டு) ஆட்டையும்கைக் கொண்டிலையோ செந்திலுக்கோர்
தஞ்சமென வந்தமர்கந் தா. 52

தானே வலியவந்து சாற்றியசொல் அத்தனையும்
ஏனென் முடியா திருக்கின்ருய்! – வானேயும்
குஞ்சரிவாழ் செந்திநகர்க் கோமானே! நானினிமேற்
பஞ்சரிக்க மாட்டேனப் பா. 53

அப்பன் குணமுனக்குண் டானல் அடியவரை
இப்படிநீ வைப்ப தியல்பன்றே - செப்பரிய
நால்வரைப்போல் இங்கொருவர் நன்கொளிர வேண்டாவோ
போல்வதில்செந் தூரா புகல். 54

புகலிக் கவுணியன்றன் புத்திரனை ஏவி
இகலிச் சமணழித்த எந்தாய்! - அகல்புவியின்
முத்தமிழ்ச்சீர்ச் செந்தின் முதல்வா! அம் மூர்த்தமொரு
பத்தனுக்கின் றீவாய் பரிந்து. 55

பரியும் கரியுமணிப் பல்லக்கும் ஏறித்
திரியும் சிலர்மனையிற் சென்று - விரியும்
கரத்தொடுநின் றேற்கவிடேல் காசறுசெந் தூரில்
வரத்தொகுதி நல்குமிறை வா. 56

வாரணமும் பைங்கிளியும் வண்ணமயி லும்பிடித்த
காரணத்தால் வேடர்குலக் கன்னிதான் - சேர
நினைத்தாள் அவளைஎந்த நீர்மைபற்றிக் கொண்டாய்!
கனைத்தகடற் செந்தில்முரு கா. 57

முருகு விரிகடம்பும் மூரிக் குரவும்
பெருகுநிறச் செச்சையும்போற் பேணித் - திருகுமொழிப்
பொல்லேன் கவியும் புனைந்தருள்வாய் செந்தூரில்
வல்லாய்! அருள்புரிதே வா. 58

தேவாதி தேவனுதல் தீக்கட் புலிங்கமென
மேவா வருஞ்செந்தூர் வித்தகனே - நாவார
வாழ்த்தும் பெருமைபெற்றால் மாநிலத்து மன்னர்வந்து
தாழ்த்துவார் தம்தம் தலை. 59

தலைமைப் பெருமைச் சடாக்கரத்தை நாடும்
நிலைமைக் குரித்தாகி நின்றும் - புலைமருவு
புல்லருக்கும் நாணிப் புலர்ந்தேன் புகழ்ச்செந்தூர்
வல்லவனே நீயுமறி வாய். 60

அறிவாய் வெளியாய் அகண்டமாய் ஆறு
பொறியாகி நின்ற புலவன் - வெறியால்
அளிமுரல்பூம் புன்னைமலி வானதிருச் செந்தூர்க்(கு)
ஒளிருமபி மானமுடை யோன். 61

உடைத்தோல்உள் ளான்புதல்வன் ஓதநீர் ஞாலம்
படைத்தோன் தலைப்புடைக்கப் பார்த்தோன் - சடைத்தோர்
களிக்குநலம் காட்டுசெந்திற் காவலவன் அன்பிற்
குளிக்குமவர் எந்தம் குழாம் 62

குழுவும் கவுமாரர் குன்றுதொறும் சென்று
வழுவின் றியதமிழால் வாழ்த்தும் - பொழுதை
வரவழைக்க வல்லாயோ மாட்டாயோ செந்திற்
சரவணப வா!குருநா தா. 63

நாதாந்த மோன நடுவான நாயகனை
வேதாந்த விஞ்சை விளைப்போனைக் - கூதாள
மாலைக் குறத்தி மணாளனைச்செந் தூரினிற்கண் (டு)
ஓலைக்கைத் தூதரைவெல் வோம் 64

ஓமென்ற மந்திரத்தின் உட்பயனை அத்தனெடு
நாமென் றுரைத்தசெந்தி நாயகனைத் - தேமென்ற
செந்தமிழாற் போற்றச் சிறிதும் சலியார்பால்
அந்தகன்கைக் ககாசெல்லு மா. 65

மாவைப் பிளக்க வடிவேல் பிடித்தசெந்தில்
தேவைக் கருதித் தெளியாமல் - பாவையர்கள்
ஊடற் குருகி உழலுமெனை ஒத்தமுழு
மூடர்க்கும் மோனமெய்து மோ 66

மோதுந் திரைக்கடல்நீர் முத்தெறியும் செந்திலில்என்
வாதும் பிணக்கும் மறந்தேனே - ஓதும்
புகழும் பிறவும் பொறுத்துப் பொதுவாத்
திகழும் குகன்செயலைத் தேர்த்து 67

தேருலவும் வீதித் திருச்செந்திற் சேவகனும்
கூருலவா வேலான் குணங்களையிங் (கு) - ஆருடனே
சொல்லலாம் சொல்லிற் றொலையாது சொன்னமட்டில்
நல்லதென்று கொள்ளார் நரர் 68

நரகம் புகுதார் நமன்கையிற் சிக்கார்
கிரகங்க ளால்வருந்தார் கிள்ளை - பரவுதமிழ்ச்
செந்திற் குகனைத் தினமும் மறவாமல்
சிந்திக்கப் பெற்றோர் சிலர் 69

சிலரன்றிச் செந்தினகர்ச் சேந்தன் அடியார்
பலரென் றுரைக்கப் படுமோ - உலகறிய
நொந்து மனக்கண்ணுல் நோக்கிநோக் கிக்குழைந்து
நைந்தும்அருட் பேறுபெரு நான் 70

நானென் றிறுமாந்து நாட்கழிக்கும் நட்டம்போய்த்
தானென் றமையும் தவம்பெற்றேன் - தேனென்று
பெய்வேத சாரம் பெருகு திருச்செந்தூர்
வைவேலான் சந்நிதியில் வந்து 71

வந்திப் பவர்க்கும்நல்ல வர்க்கும் மறவாமற்
சிந்திப் பவர்க்கும் திருவருளும் - செந்திற்
பதியிலிருந் தீகின்ற பன்னிருகைச் செவ்வேற்
கதியினுக்கோர் வித்தனையான் காண் 72

காண விரும்புமென்னைக் காசினியி லுள்ளவர்க்கு
நாண விடுத்தனையே ஞாயமோ - சேணளவு
சோலைத் திருச்செந்தூர் துங்கமுறச் செய்யும்வண்ணம்
வேலைத் தரித்ததெய்வ மே 73

மேவார்க ளாம்அவுணர் வேரறுத்த வேற்பெருமான்
பாவாணர் ஏவல்செய்யும் பான்மையான் - மூவா
முருகோன் திருச்செந்தில் முன்னேன் முராரி
மருகோன் எனையாண்ட வன் 74

ஆண்டலைப்புள் கூவும் அடற்கே தனத்தானைத்
தூண்டருசீர் பன்னிரண்டு தோளானை - மீண்டும்
பிறவா தருள்செந்திற் பெம்மானைச் சற்றும்
மறவா தெனது மனம். 75

எனது மனம்தானே எங்கெங்கும் நிற்கும்
உனது திருவருளோ ஓதாய் - அனவரதம்
பல்வார்த்தை யென்பாற் பகர்கின் றதுசெந்திற்
செல்வா! சிவதே சிகா! 76

தேசிகனும் தெய்வமும்நின் சீரருளே என்றுகுறித்(து)
ஆசி பகர்ந்தும் அலமந்தேன் - வாசியென
வன்னமயில் ஊர்வானே! வந்தியர்சூழ் செந்திலில்வாழ்
முன்னவனே! என்னவித மோ 77

மோனம் அறியேன் முதிரும் தவமறியேன்
ஞான நிலையறியேன், நாயினேன் – ஆனமட்டில்
வந்திப்பேன் கைவிடுமோ வாழ்விக்கு மோவளஞ்சேர்
செந்திநகர்க் கந்தன் செயல். 78

செயலிறந்த பூரணமே தேவர் நிமித்தம்
வயமலிவேற் கந்தனென வந்த - வியனுணரார்
செந்திநகர்க் கோயிலுக்குட் சென்றாலும் தேர்ந்துகொள்வார்
மந்திரவித் தாப்பிரண வம். 79

பிரணவத்தின் உட்பொருளைப் பேசிப் பிணங்கும்
கரணமறப் பார்க்கும் கடவுள் – அரணம்
திகழ்கின்ற செந்திற் சிறுவனெனச் செப்பி
இகழ்கின்ற வர்க்குநல்லா னே. 80

நல்லோர் பரவுசெந்தில் நாயகனை நஞ்சுமிழ்வேல்
வல்லோனே என்று வழுத்தாமல் - பொல்லோன்என்(று)
ஏசு மவர்க்கிகலாய் இங்கலையும் வம்பருக்கே
பூசுரர்கோன் தன்கைப் பொறி. 81

பொறியும் புலனுமற்ற போத மயம்என்(று)
அறியும் தவர்க்கெளியன் ஆவான் - வெறிமிஞ்சு
மந்தித் திரள்வாழ் மலர்ச்சோலை மன்னுதிருச்
செந்திற் பதியிலொரு சேய். 82

சேயாய்க் குருவாய்ச் சிவனுக் குவகைநல்கித்
தீயார்க் கெமனாகிச் சித்தருக்குத் - தாயாகிச்
சந்தவரைச் செந்தூர் தனக்கரச னாவதுவே
சுந்தரத்தோட் கந்தன் தொழில். 83

தொழுவார் விழிகாணத் தோகை மயில்மேற்
குழுவாம் புலவரொடு கூடி - தழுவாத
வேல்பிடித்துத் தோன்றுதலை விட்டனையோ செந்திலிற்செங்
கோல்பிடித்த கைக்குகனே கூறு. 84

கூறாய மங்கையுடைக் கோமான் குருபரனை
ஆறாறு தத்துவத்துக் கப்பாலில் - தேறாத
என்போ லியர்க்கும் இசைந்தநலம் காட்டுசெந்தூர்
அன்போர்க்கே நல்கும் அருள் 85

அருளாசை கொண்டவர்போல் அம்புவியிற் ரேன்றிப்
பொருளாசை மிஞ்சிப் புலர்ந்தேன் - தெருளாளர்
மன்னுதிருச் செந்தினகர் வள்ளலே வந்துரைத்த
நின்னுரைபோற் செய்தருளின் னே 86

நேயம் பெருத்துமுழு நீறணிந்த வேடமிட்டும்
மாய இருளால் மருள்கின்றேன் - நீயதுகண் (டு)
இன்னந் திருவருட்பே றீந்திலையே செந்தினகர்
மன்னவனே வெண்சே வலா. 87

சேவற் பதாகைதிகழ் செந்திநகர்ச் சந்தவரைக்
காவற் றெழில்புரியும் கந்தனையே - ஆவற்
பெருக்கமொடு கைகுவிக்கும் பேறுபெற்ற பேர்க்கே
திருக்ககன்ற ஞானத் திரு 88

திருவும் பெருகருளும் செஞ்சொற் றமிழும்
மருவும் படிகருணை வைக்கும் - கருமறலி
பற்கோரம் காணார் பரவுதிருச் செந்தினகர்ப்
பொற்கோவில் கொண்ட பொருள் 89

பொருள்நசையாற் பல்வாறு புண்படுவேன் தன்னை
அருணகிரி யென்றுரைத்த தாரோ - தருணமறிந்து
ஆளும் திருச்செந்தி லாதிபனே! உன்னையன்றிக்
கோளும் சிறிதுளது கொல்! 90

கொல்லா விரதமொன்றே குற்றமற்ற தென்றுணர்ந்து
நில்லோர் மனத்தகத்தும் நிற்பாயோ - வல்லாண்மைக்
கந்தனே! செந்திநகர்க் காவலனே! நீநிறைந்த(து)
எந்தவிதம் என்னே டியம்பு. 91

இயமன்கைச் சூலமினி என்செய்யும், மாரன்
செயமிஞ் சியகணையென் செய்யும் - வியனென்றும்
வேதன்விதி என்செய்யும், மிக்கதிருச் செந்தூர்வாழ்
நாதனருள் உண்டே நமக்கு. 92

நமராய னைத்தடிந்த நம்பன் பரவும்
குமரா! எனத்தினமும் கூவும் - தமராவார்
எல்லவரும் வாழவென்றே ஈடில்புகழ்ச் செந்தூர்வாழ்
வல்லவனைக் கெஞ்சுமென்றன் வாய். 93

வாய்மை அறிவடக்கம் வண்மை முதலாய
தூய்மை முழுதும் தொகுத்ததுவும் - சேய்மருவு
செந்தினகர்க் கோயில் தெரிசித்துக் கொண்டபின்னும்
புந்தியிடத் துண்டாமோ பொய். 94

பொய்யும் புலையும் பொருந்தினோர் செந்தமிழால்
வையம் முழுதும் மகிழுமே - மெய்யுலகம்
ஏழும் பரவும் எழில்திருச்செந் தூரிடத்தில்
வாழும் ஒருவன் மனம். 95

மனங்கொண்ட பேராண்மை வாழ்வனைத்தும் நல்கும்
கனங்கொண்ட செந்தினகர்க் கந்தன் - தினங்கொண்ட
செந்தமிழின் ஆசை சிறிதும் தணியான்என்(று)
இந்தவிதம் யானறிந்த தே. 96

அறிந்த தனந்தம் அறிவரிய தாகிச்
செறிந்த தனந்தம் திரையால் - மறிந்தபுனற்
சிந்துடையான், செந்தில் திருவுடையான் செங்கடப்பம்
கொந்துடையான் ஆடுகின்ற கூத்து. 97

கூத்தாடு வான்மகளைக் கொற்றநவ வீரருக்கு
மூத்தானைச் செந்தில் முருகோனைச் - சேத்தார்க்
கடம்பணிந்த திண்புயனைக் காணக் கருதித்
திடம்படுநெஞ் சுள்ளார் சிலர், 98

சிலருக் கருள்புரிந்த செந்திற் குமரன்
பலரைப் பரதவிக்கப் பார்த்தான் - உலகிற்
சிறியேனை ஆள்வானோ சீரழிப்பான் கொல்லோ
அறியேன் அறியேனம் மா. 99

அம்மம்ம செந்திநகர் ஆளும் அயில்வேற்கைச்
செம்ம லருளைத் தினம்நாடி - மும்மலமும்
சிந்த முயலும் திறன்பொருந்தும் சித்தருக்குச்
செந்தமிழே ஒப்பில்பெருஞ் சீர். 100

நூற்பயன்

தண்பாவு செஞ்சொற் றமிழ்த்திருச்செந் தூர்முருகன்
வெண்பா ஒருநூறும் வேண்டுவார் - கண்பாய
பூவுலகும் வானுலகும் போற்றும் புகழ்பொறுத்து
மேவுவர்அன் னோன்அடிக்கீழ் மெய்.

வேலுமயிலும் துணை

*இந்நூலாசிரியர்*

## திருச்செந்தூருக்கருளியுள்ள பிற நூல்கள்.

1 வெண்பா அந்தாதி
2 சிலேடை வெண்பா
3 திரிவந்தாதி
4 யமக அந்தாதி
5 பதிற்றுப் பத்தந்தாதி
6 செந்திநாயக சதகம்
7 உலா
8 நவரச மஞ்சரி.
9 அகப்பொருட் கோவை
10 தசாங்க வகுப்பு
11 கௌமார விஜயம்
12 சந்தமாலிகைத் திருப்புகழ்
13 குஞ்சரி மாலை
14 வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ்.
15 வீரவாகு வாளலங்காரம்
16 வீரவாகு வண்ணப்பதிகம்.

★ வாழிவிருத்தம் ★

1 பன்னிருபாமாலை
2 திரிலோகசுதந்தரர் பதிகம்
3 முருகன் பதிகம்
4 திருப்புகழ்.
5 திருப்புகழ்ப் பதிகம்
6 படைவீட்டுப் பதிகம்
7 படைவீட்டுத் திருப்புகழ்.

---

ராஜேஸ்வரி பிரஸ், விழுப்புரம்-83